18th August 1960] [Sri P. S. Chinnadurai]

கடந்த சில மாதங்களுக்கு முன்னால் காப்டன் நானாவதி வழக்கு நடந்தது. அந்த வழக்கிலே சம்பந்தப்பட்டிருந்த நபர் தான் பெரியவரே தவிர, அதிலே சம்பந்தப்பட்டிருந்த விஷயங்கள் சமுதாயத்தின் அறிவையும் ஒழுக்கத்தையும் வளர்ப்பதற்கு உகந்தவை என்று எவராலும் கொள்ளமுடியாது. இருந்த போதிலும், இந்த ராஜ்யத்திலே, நீண்டகாலமாக, பிரசித்தி பெற்ற பத்திரிகைகள்கூட, நல்ல அரசியல் செய்திகளையும் விட்டு, இந்த விவகாரத்தை பத்தி, பத்தியாக, கேள்வி, பதில் என்று போட்டிருந்தார்கள். அதே சமயத்தில் நல்ல பல பேச்சுக்களை நான் பேசினேன். அதே சந்தர்ப்பத்தில் தேசத்திற்கு மிகவும் அவசியமான—கட்சிக்கு அவசியமானதோ, அல்லவோ—பல பேச்சுக்களைப் பேசியிருந்தேன். அதையெல்லாம் விட்டு விட்டு, இந்த கேசைப்பற்றி பத்தி, பத்தியாக, அந்தப் பக்கம் தொடரும், இந்தப் பக்கம் தொடரும், என்று பக்கம் பக்கமாக பிரசுரித்திருந்தார்கள். 60, 70 ஆண்டு காலமாக இருக்கும் பத்திரிகைகூட அம் மாதிரிச் செய்தது. அதற்கு ஒரு தடை விதிப்பதால், தேசத்திற்கு அவசியமான விஷயங்கள் எங்கே, எவரால், எப்பொழுது பேசப் பட்டாலும், அவற்றைப் பிரசுரிக்க பத்திரிகைகளில் இடம் கிடைக்கும் என்ற நோக்கத்தில் இந்த மசோதாவை நான் ஆதரிக்கிறேன்.

இந்த மசோதாவை நிறைவேற்றி அமல் நடத்தும் காலத்தில், துணிச்சலோடும், தைரியத்தோடும் அதை அமல் நடத்தவேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் ஆதரவை இந்த மசோதாவிற்கு அளிக்கிறேன்.

MR. SPEAKER : The question is—

"That the Madras Judicial Proceedings (Regulation of Reports) Bill, 1960 (L.A. Bill No. 12 of 1960) as amended be passed."

The motion was put and carried and the Bill as amended was passed.



(4) THE MADRAS SALES OF MOTOR SPIRIT TAXATION (AMENDMENT) BILL, 1960 (L.A. BILL NO. 23 OF 1960).

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Speaker, Sir, I beg to move—

"That the Madras Sales of Motor Spirit Taxation (Amendment) Bill, 1960 (L.A. Bill No. 23 of 1960) be taken into consideration."

MR. SPEAKER : Motion moved—

"That the Madras Sales of Motor Spirit Taxation (Amendment) Bill, 1960 (L.A. Bill No. 23 of 1960) be taken into consideration."

[18th August 1960

* **THE HON. SRI R. VENKATARAMAN :** கனம் சபாநாயகர் அவர்களே, இப்பொழுது இருக்கும் வரிவிதிப்பு முறையில், காலன் பெட்ரோலுக்கு 38 நயேபைசே என்றும், டீசெல் ஆயிலுக்கு 35 நயேபைசே என்றும், இதர எண்ணெய்களுக்கு 10 நயேபைசே என்றும் இருக்கிறது. இப்பொழுது மெட்ரிக் முறையை அனுஷ்டிக்க வேண்டும் என்பதால், இனிமேல் காலனுக்குப் பதிலாக லிட்டரில் கணக்கு வைத்துக்கொள்ளுவது என்று மாற்றியமைக்கும் போது, பெட்ரோலுக்கு 9 நயேபைசே பர் லிட்டர், டீசெலுக்கு 8 நயேபைசே பர் லிட்டர், மற்ற ஸ்பிரிட்டுக்கு 2 நயேபைசே பர் லிட்டர் என்று மாற்றியமைக்கிறோம். இதில் ஒரு காலனுக்கு சற்றேரக்குறைய 4½ லிட்டராக வருகிறது. கணக்குப் போட்டால், பெட்ரோலுக்கு 38 நயேபைசே என்பது 8.359 நயேபைசேவாக ஒரு லிட்டருக்கு வருகிறது; அதேபோல், டீசெலுக்கு 35 நயேபைசே என்பது, 7.699 நயேபைசேவாக வருகிறது. மற்ற ஸ்பிரிட்டுகளை எடுத்துக் கொண்டால், 2.199 பர் லிட்டர் என்று வரும். இதில், பெட்ரோலுக்கும், டீசெலுக்கும் வித்தியாசத்தை அமைத்துக் கொள்ளவேண்டும் என்கிற காரணத்தினால், பெட்ரோலுக்கு 9 நயேபைசே என்றும், டீசெலுக்கு 8 நயேபைசே என்றும், மற்ற ஸ்பிரிட்டுகளுக்கு 2 நயேபைசே என்றும் திருத்தியமைத்திருக்கிறோம். இந்த மசோதாவை சபை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

**SRI M. KALYANASUNDARAM :** ஸார், இது மறைமுகமாக பெட்ரோல்மீது சர்க்கார் வரியை உயர்த்துவதாகிறது. பெட்ரோலை இப்பொழுது அதிகமாக பஸ்ஸுகளுக்கு உபயோகிக்கவில்லை. சாதாரணமாக பெட்ரோல் கார்களுக்குத்தான் உபயோகிக்கிறார்கள். கார் வைத்திருப்பவர்கள் எல்லோரும் பணக்காரர்கள் என்று சொல்லிவிட முடியாது. மிடில் கிளாஸ் பீபிளும், ஆபீசர்களும் மோட்டார்களை உபயோகிக்கிறார்கள். ரூபாயிலிருந்து, நயேபைசேக்கு மாற்றும்போது, கொஞ்சம் அதிகமாக உயர்த்தப்பட்டது. இப்பொழுது காலனிலிருந்து லிட்டருக்கு மாறுதல் செய்யும் சந்தர்ப்பத்தில், அதிகமாக வரி வரும்படி மாற்றியிருப்பது சரியில்லை. ஆகவே இந்த மசோதாவிற்கு என் ஆதரவு கொடுக்க முடியாது என்று தெரிவிக்கிறேன்.

* **SRI V. K. RAMASWAMY MUDALIYAR :** கனம் சபாநாயகர் அவர்களே, நானும் கனம் கல்யாணசுந்தரம் சொன்னதை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். அதாவது இப்பொழுது, மாறுதல் செய்யும் நிமித்தமாக பெட்ரோல், டீசெல், மற்ற எண்ணெய்களுக்கு வரியை உயர்த்துகிறார்கள். வேறொன்றுமில்லை. அப்படி உயர்த்துவதன் காரணமாக எவ்வளவு லட்சம் அல்லது கோடி ரூபாய் வருகிறது என்பது தெரியவில்லை. சுமார் முக்கால் கோடியாவது வரலாம். எது எப்படி இருந்தபோதிலும், இதனால் அநேகபேர்கள் பாதிக்கப்படுவார்கள் என்பதைப்பற்றி சந்தேகப்பட வேண்டியதில்லை. தவிரவும், எம்மாதிரியான விதிவிலக்குகள் விவசாயிகளுக்கு அளிக்கப்படும், ஏதாவது விலக்குக்

18th August 1960] [Sri V. K. Ramaswamy Mudaliar]

கொடுக்க முடியுமா, சலுகை காட்டப்படுமா என்று ஒன்றும் தெரியவில்லை. ஆகவே, இந்த கன்வர்ஷன் மூலமாக, மறைமுகமாக வரியை உயர்த்துவது நியாயமில்லை.

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, மாற்றலில் 8.359 என்று வந்ததை, ஒன்று 8 என்று செய்யவேண்டும், அல்லது 9 ஆக வைத்துக்கொள்ள வேண்டும். எப்படி அங்கத்தினர்கள் வரி அதிகமாகிறது என்று சொல்கிறார்களோ, அப்படியே, சர்க்கார் நிதிநிலையைப் பார்த்து, அதை குறைக்க முடியவில்லை. மற்றொன்று, பெட்ரோலுக்கும், டீசெலுக்கும் ஒரே வரி போட்டால், அப்பொழுது டீசெலுக்கும் 8 நயேபைசே வரும். அப்பொழுதும் இரண்டுக்கும் ஒரே மாதிரியாகப் போட்டிருக்கிறார்கள், கூடுதலாக பெட்ரோல் கார்வைத்திருப்பவர்கள்தான் உபயோகிக்கிறார்கள் என்று சொல்வார்கள். ஆகவேதான் பெட்ரோலுக்கு 9 நயேபைசே என்றும், டீசெலுக்கு 8 என்றும் வைத்தோம்.

எவ்வளவு வருமானம் வரும் என்று கனம் ராமசாமி முதலியார் அவர்கள் கேட்டார்கள்; ஒரு கோடி, முக்கால் கோடி வருவதானால் ரொம்ப சந்தோஷம்; அது பல பெரிய திட்டங்களை நிறைவேற்ற உதவியாக இருக்கும். பெட்ரோலிலிருந்து ரூபாய் 5,35,000-மும், டீசெலிலிருந்து ரூபாய் 6 லட்சம் சில்லரையும், மற்ற ஸ்பிரிட்டுகளிலிருந்து—அவைகளுக்கு 2 நயேபைசேதான் போட்டு இருக்கிறோம்—சுமார் 27,000 ரூபாய் வருமானம் வரலாம். இதை மிக் அதிகமான வரிவிதிப்பு என்று சொல்லிவிடமுடியாது. ஆகவே, இதை சபை ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : The question is—

"That the Madras Sales of Motor Spirit Taxation (Amendment) Bill, 1960 (L.A. Bill No. 23 of 1960) be taken into consideration."

**The motion was put and carried and the Bill was taken into consideration.**

Clauses 2 and 3 were put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move—

"That the Madras Sales of Motor Spirit Taxation (Amendment) Bill, 1960 (L.A. Bill No. 23 of 1960) be passed."

MR. SPEAKER : Motion moved—

"That the Madras Sales of Motor Spirit Taxation (Amendment) Bill, 1960 (L.A. Bill No. 23 of 1960) be passed."

**SRI P. S. CHINNADURAI** : சபாநாயகர் அவர்களே, இந்த ராஜ்யத்திலே ஒரு புதிய சம்பிரதாயத்தை கனம் நிதியமைச்சரவர்கள் சிருஷ்டித்தார்கள்; அதைக் கண்டு பெருமைப் பட்டார்கள்; நாங்களும் பெருமைப் பட்டோம். ஒரு புதிய கொள்கையைக் கொண்டு வரும்போது, அநேகமாக எல்லாக் கட்சித் தலைவர்களையும் கலந்துகொண்டு, அவர்கள் சம்மதத்தோடு அமல் நடத்தும் ஏற்பாட்டை இந்த ராஜ்யத்தில் செய்திருக்கிறோம் என்று அவர்கள் அடிக்கடி கூறுவது உண்டு. அதை நான் வரவேற்கிறேன். சர்வ கட்சித் தலைவர்களும் சர்க்கார் கட்சிக் கொள்கைக்கு ஒத்துக்கொண்டால்தான் அப்படி என்று இருக்கக் கூடாது. ஏதாவது கொஞ்சம் மாறுபட்ட அபிப்பிராயம் கொண்டிருந்தால், அதை ஏற்றுக் கொள்வதில்லை என்று இருத்தல் கூடாது. நீண்ட நாட்களாக, விவசாயிகள் உபயோகிக்கும் டீசெல் ஆயிலுக்கு வரி வேண்டாம் என்று எல்லாக் கட்சித் தலைவர்களும் ஒரு முகமாக வலியுறுத்தி வந்திருக்கிறார்கள்; காங்கிரஸ் கட்சியில் உள்ள விவசாய அங்கத்தினர்கள் பலரும் அதனை ஆதரித்து இந்த சபையிலே பேசியிருக்கிறார்கள். ஒரு சில லட்ச ரூபாய் சர்க்காருக்கு நஷ்டம் ஏற்படும் என்றாலும், அதன் மூலம் உணவு உற்பத்தி அதிகரித்து, பல லட்சம் லாபம் வரும் என்ற காரணத்தினால் அதைச் செய்யவேண்டும் என்று கேட்டிருக்கிறார்கள். அப்படியிருக்க இப்பொழுது ஏதோ மாறுதல் செய்யும்போது, விவசாயிகளுக்கு நிவாரணம் ஏற்படும் முறையில் ஏதாவது செய்ய வேண்டும். அப்படி செய்வதாக கனம் அமைச்சரவர்கள் உத்தரவாதத்தை அளித்தால், இந்த மசோதாவை முழு மனதோடு ஆதரிக்க முடியும். அப்படி அவர்கள் தைரியமாக சொல்ல வேண்டும். ஒரு சில லட்ச ரூபாய் நஷ்டம் என்றாலும், அது விவசாயிகளுக்கு உபயோகமாக இருக்கும் என்ற காரணத்தால், டீசெல் எண்ணெய்க்கு அடியோடு விலக்கு கொடுக்க சர்க்கார் முன் வரவேண்டும் என்று மறுபடியும் கேட்டுக் கொள்ளுகிறேன். இந்த விஷயத்தில், எதிர்க்கட்சிகளிடையே, எல்லா எதிர்க் கட்சித் தலைவர்களிடமும், ஒருமித்தக் கருத்துதான் இருக்கிறது என்பதை இந்த நேரத்திலே சர்க்காருக்குக் குறிப்பிட்டுச் சொல்ல விரும்புகிறேன்.

* **THE HON. SRI R. VENKATARAMAN** : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் சின்னதுரை சொல்லிய யோசனையை சர்க்கார் நன்றாகப் பரிசீலனை செய்தார்கள். விவசாயிகளுக்கு எந்த விதத்திலும் உதவியளிக்க வேண்டும், ஆதரவு கொடுக்கவேண்டும் என்ற எண்ணமும் அக்கரையும் சர்க்காருக்கு இருக்கிறது என்பதை நான் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். ஆனால் அந்த டீசல் எண்ணெயை விவசாயிகள் எந்த விதத்தில் உபயோகிக்கிறார்கள் என்பதைப் பார்க்க வேண்டியதாக இருக்கிறது. விவசாயத்திற்குத் தான் உபயோகிக்கிறார்களா அல்லது லாரி பஸ் முதலியவைகளுக்கு உபயோகிக்கிறார்களா என்பதைக் கண்டுபிடிக்க வேண்டியதாய் இருக்கிறது. அதனால் ஏராளமான தவறுகள் நடப்பதற்கு இடம் இருக்கிறது. அதனால் பெரும் கூச்சலும், குழப்பமும் ஏற்படலாம் என்பதை சர்க்கார் நன்றாக பரிசிலனை செய்துதான் ஒரு முடிவுக்கு

18th Augus 1960] [Sri R. Venkataraman]

வந்திருக்கிறார்கள். இவைகளையெல்லாம் ஆராய்ந்துதான் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறார்கள். வேறு வழி இல்லை என்ற முடிவுக்கு வந்திருக்கிறார்கள். அப்படித் தவறுகள் நடக்காது பார்த்துக் கொள்வதற்கு கனம் சின்னதுரை அவர்கள் ஏதாவது யோசனைகளைச் செய்து வைத்திருந்தால், அதைச் சர்க்காருக்கு எழுதி அனுப்பும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படி அனுப்பி வைத்தால் அதைப்பற்றிச் சர்க்கார் பரிசீலனை செய்து முடிவுக்கு வருவார்கள் என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : The question is—

"That the Madras Sales of Motor Spirit Taxation (Amendment) Bill, 1960 (L.A. Bill No. 23 of 1960) be passed."

The motion was put and carried and the Bill was passed.

### V—GOVERNMENT MOTION—CHANGE IN DATE FOR NON-OFFICIAL BUSINESS.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, it was decided by the Assembly yesterday that 20th Saturday should be a non-official day. But now the Leaders of Parties want that tomorrow (19th August 1960) should be allotted for transacting non-official business. I also agree to that proposal.

Sir, I move—

"That non-official business be transacted on Friday, the 19th August instead of on Saturday the 20th August, as decided earlier."

The motion was put and carried.

SRI S. M. ANNAMALAI : What about day after tomorrow, Sir?

MR. SPEAKER : To-day we hope to do five Bills. We have got five more Bills. We will do that day after to-morrow. Tomorrow will be a non-official day, instead of official day. Tomorrow's official business will be done day after tomorrow.

### IV.—GOVERNMENT BILLS—*cont.*

### (5) THE MADRAS PRESERVATION OF PRIVATE FORESTS (AMENDMENT) BILL, 1960

* THE HON. SRI M. A. MANICKAVELU : I beg to move—

"That the Madras Preservation of Private Forests (Amendment) Bill, 1960 be taken into consideration."

The Madras Preservation of Private Forests Act was enacted in the year 1946, with a view to prevent the indiscriminate destruction